புரிந்தருளி முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தருளிய தலம் இது. சிதம்பரம் முதலிய ஒவ்வொரு சிவத்தலத்திற்கும் எழுந்தருளிப் பல திருப்பணிகளைப் புரிந்து தலத்துக்கு ஒவ்வொரு வெண்பாவாக க்ஷேத்திரத் திருவெண்பா என்ற நூலைப் பாடியருளிய ஐயடிகள் காடவர்கோன் நாயனார் அரசாட்சி புரிந்தருளிய தலம் இது. திருவொற்றியூர் எல்லையைக் கடந்தவுடன் இரண்டு கண்களின் பார்வைகளையும் இழந்திருந்த சுந்தர மூர்த்தி நாயனார் இடக்கண் பார்வையைப் பெற்ற தலம் இது. திருக்குறிப்புத் தொண்ட நாயனார், சாக்கிய நாயனார் ஆகியவர்கள் ஏகாம்பரேசுவரரை வழிபட்டு முக்தியைப் பெற்ற தலம் இது. முத்தித்தலங்கள் ஏழுக்குள் ஒன்று இந்தத் தலம். காமாட்சியம்மையினுடைய திருக்கோயிலாகிய காமக் கோட்டமும், குமரக் கடவுளினுடைய ஆலயமாகிய குமரகோட்டமும், வரதராஜப் பெருமாளினுடைய ஆலயமாகிய அத்திகிரியும், வேறுபல திருக்கோயில்களும் உள்ள பெரிய சிவத்தலம் இது. ''நகரேஷுகாஞ்சி'' என்று இதைப் பற்றி வடமொழியில் ஒரு சொற்றொடர் உண்டு. சுந்தர மூர்த்தி நாயனார் இடக்கண் பார்வையைப் பெற்றதைப் புலப்படுத்தி அவர் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''ஆலம் தானுகந் தமுதுசெய் தானை
ஆதியைஅம ர்தொழு தேத்தும்
சீலம் தான்பெரி தும்முடை யானைச்
சிந்திப் பாரவர் சிந்தையுளானை
ஏல வார்குழ லாளுமை நங்கை
என்றும்ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பன்எம் மானைக்
காணக்கண்அடி யேன்பெற்ற வாறே.''

காஞ்சிபுரத்தில் உள்ள தலங்கள்: அரிசாபம் தீர்த்த தானம், அமரீசம், அநேகதங்காவதம், அந்த கேசம், அபிராமீச்சரம், அனந்த பத்மநாபேசம், ஆதிபிதீசம், இட்டசித்தீச்சரம், இரணியீசம், இரேணுகீச்சரம், இறவாத்தானம், கச்சபேசம், கயிலாயம், கண்ணீசம், கச்சிமயானம், கச்சிக் காரோணம், குமரகோட்டம், சனற்குமாரேசம், சத்ததானம், சலந்தரீசம், சார்ந்தாசயம், சிவாத்தானம், சித்தீசம், சுரகரீசம், தக்கீசம், தான்றோன்றீச்சரம், திருநெறிக்காரைக்காடு, திருமேற்றளி, திருவோணகாந்தன்தளி, திருமாற்பேறு, நவக்கிரகீசம், நாரசிங்கம், பராசரேசம், பணாதரீச்சரம், பலபத்திரராமீசம், பரசிராமீச்சரம், பாண்டவீசம், பிறவாத்தானம், புண்ணிய கோடீசம், மணி கண்டீச்சரம், மக்கீசம், மகாசாத்தன் தளி, முத்தீசம், முப்புராரி கோட்டம், யோகாசாரியர்தளி, வலம்புரி விநாயகர் திருக்கோயில், வன்மீகநாதம், வயிரவீசம், வாணீசம், விருவச்சேனீசம், வீரராகவீசம் முதலியவை. இந்தத் தலத்தில் உள்ள தீர்த்தங்கள் சகோதர தீர்த்தம், சருவ தீர்த்தம் முதலியவை.

நிறைந்தது

